## VII.—GOVERNMENT BILL.

### THE MADRAS APPROPRIATION (NO. 2) BILL, 1958.

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, I beg leave to introduce the Madras Appropriation (No. 2) Bill, 1958.

MR. SPEAKER : The question is—

'That leave be granted for the introduction of the Madras Appropriation (No. 2) Bill, 1958'.

The motion was put and carried.

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, I introduce the Bill.

MR. SPEAKER : The Bill is introduced.

## VIII.—BUDGET FOR THE YEAR 1958–59—VOTING OF DEMANDS FOR THE YEAR 1958–59—*cont.*

### DEMAND XXXII—ROAD TRANSPORT SCHEMES—WORKING EXPENSES.

MR. SPEAKER : Now we shall proceed with the Demand for Grants, Demand XXXII—Road Transport Schemes—Working Expenses.

THE HON. SRI R. VENKATARAMAN : Mr. Speaker, Sir, on the recommendation of the Governor, I move—

'That the Government be granted a sum of Rs. 1,77,50,600 under Demand XXXII—Road Transport Schemes—Working Expenses'.

10-58 a.m. கனம் சபாநாயகர் அவர்களே இந்த மான்ய கோரிக்கை சம்பந்தமாக ஒரு சிறிய அறிக்கையைத் தயாரித்து அங்கத்தினர்கள் எல்லோருக்கும் கொடுக்கப்பட்டிருக்கின்றது. இந்த சமயத்தில் ஒன்றிரண்டு வார்த்தைகளை மாத்திரம் சொல்லிக்கொண்டு இறுதியில் பதில் அளிக்கின்ற சமயத்தில் இதைப்பற்றி விரிவாக பதில் கொடுக்கலாம் என்று நினைக்கிறேன். இந்த நடைமுறை வருடத்தில் 60 புது பஸ்கள் போடப்பட்டிருக்கின்றன. நடைமுறை வருடத்தில் 13 கோடி 47 லட்சத்திற்கு மேற்பட்ட பொதுமக்கள் இதில் பிரயாணம் செய்திருக்கிறார்கள். அவர்களுக்கு என் நன்றி. அதற்கு முந்திய வருஷத்தில் 12 கோடி 29 லட்சத்திற்கு மேற்பட்ட மக்கள்தான் பிரயாணம் செய்திருக்கிறார்கள். இப்போது நடைமுறை வருடத்தில் கிட்டத்தட்ட 20 லட்சத்திற்கு மேற்பட்ட பிரயாணிகள் இதில் பிரயாணம் செய்திருக்கிறார்கள் என்று சொல்லுகின்றபொழுது எந்த அளவுக்கு நம்முடைய சர்க்கார் போக்குவரத்துத்துறையில் சேவை செய்திருக்கிறது என்பது நன்றாகத் தெரியும். அடுத்தபடியாக முக்கியமாக கவனிக்கவேண்டியது நம்முடைய பஸ்கள் 1956-ம் வருடத்தில் ஒரு கோடி 33 லட்சத்திற்கு மேற்பட்ட மைல்கள் பிரயாணம் செய்தன. இப்போது நடைமுறை வருடத்தில் ஒரு கோடி 40 லட்சத்திற்கு மேற்பட்ட மைல்கள் ஓடியிருக்கின்றன. இன்னும் இந்த பஸ்கள் மைல் ஒன்றுக்கு சராசரியாக ஒரு ரூபாய் இருபது நயாபைசா சம்பாதித்திருக்கிறது. பஸ்கள் வைத்திருக்கிற பெரிய முதலாளிகள் எல்லோரும் ஒரு ரூபாய்க்கு மேல் ஒரு மைலுக்கு வருமானம் வந்தால், நல்ல வருமானம் என்று ஒத்துக்கொள்வார்கள். செலவை எடுத்துக்கொண்டு பார்க்கிறபொழுது, ஒரு மைலுக்கு ஒரு ரூபாய் எட்டு நயாபைசா செலவு ஆகியிருக்கிறது. ஆனால் இந்த ஒரு ரூபாய் எட்டு நயாபைசாவில்